ஸ்ரீ குருப்யோ நம:

ஓம் ஸ்ரீ பரமாத்மனே நமஹ

**தந்தைதாய் ஆவானும் சார்கதிஇங் காவானும்**

**அந்தமிலா இன்பநமக் காவானும் - எந்தம் உயிர்**

**தான் ஆகுவானும் சரணாகுவானும் அருட்**

**கோனாகுவானுங் குரு.**



**நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து**

**நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்கள்**

**எல்லா உயிர்க்கும் இறைவனே ஆயினும்**

**கல்லார் நெஞ்சத்து காண ஒண்ணாதே.**

# தன்னை அறியும் தமிழ் வழி வேதாந்த பாடங்கள்

## (முகவுரை)

அகண்டமாய், ஆதியாய், அனைத்துமாய், ஏகமாய் எங்கும் நிறைந்து இருக்கின்ற அந்த எல்லையில்லா மெய்ப்பொருளை ஒரு எல்லைக்குள் மட்டும் பார்ப்பது என்பது, நமக்கு கொடுக்கப்பட்ட இந்த புறப் புலன்களால் என்றுமே சாத்தியம் ஆகாது.

ஏன் என்றால்,

*"என் கண்களைக் கொண்டு மற்ற அனைத்தையும் நான் பார்க்கலாம், ஆனால், அதே கண்களைக் கொண்டு, என் கண்களையே நான் பார்க்க முடியாது."*

இதுப்போலத்தான், **"நான்"** என்ற ஒரே மெய்ப்பொருளாக நானே இருந்துக் கொண்டு, என்னையே நான் வெளியே தேடிக் கொண்டு இருப்பது என்பது, எத்தகைய அறியாமை என்பதை போதிக்கக் கூடிய விசயங்கள்தான் இந்த பாடங்களின் விசயங்கள்.

இங்கு **"நான்"** மட்டுமே ஒரே மெய்ப்பொருளாக இருக்கின்றேன் என்பதை எப்படி பொருள் புரிந்துக் கொள்ள வேண்டும் என்றால், இந்த அழியக்கூடிய உடலைக் கொண்டு **"நான்"** என்று நினைத்துக் கொள்ளக்கூடாது. அழியாத ஒன்றாக, அனைவருக் குள்ளும் இருக்கின்ற அந்த ஆன்மாவாக **"நான்"** இருக்கின்றேன் என்பதை சரியாக பொருள் புரிந்துக் கொள்ள வேண்டும்.

இதில், ஆன்மாவாக, அனேக ஆன்மாக்கள் இருக்கின்றன என்பதையும், இறைவனாக பரமாத்மா என்ற ஒருவர் தனியாக இருப்பதாகவும் சில நூல்களின் வாயிலாக படித்து விட்டு, பலரும் பல ஆன்மாக்கள் உள்ளன என்றும், அவைகள் பலவிதமான பாவ, புண்ணியங்களின் அடிப்படையில் பல்வேறு உடல்களை பல பிறவிகளாக எடுக்கின்றன என்றும், மற்றவர்களல் ஏற்றி வைக்கப்பட்ட ஏகப்பட்ட அறிவைக் கொண்டு, குழப்பத்தில் இருக்கின்றனர்.

இத்தகைய குழப்பவாதிகளுக்கு இறைவனின் தேவையே, இவர்கள் ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களை ஏராளமான மனக் குறைகளாக கூறிக் கொண்டு, புலம்பித் தீர்ப்பதற்கான ஒரு போக்கிடம் அவ்வளவுதான்.

அதற்காகத்தான் இறைவன் என்ற ஒருவர் இவர்களுக்கு வேறாகத் தேவைப்படுகின்றதே தவிர, மற்ற எந்த வகையிலும் இறைவனை இவர்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை.

இவர்களுக்கு சாதகமான இறைவனை பலவாறாக இவர்கள் ஏற்படுத்திக் கொண்டதுப் போன்று, ஆன்மாக்களையும் பலவாறாக இருப்பதாக இவர்களே கற்பித்துக் கொண்டார்கள்.

இங்கு போதிக்கப்படுகின்ற பாடங்கள் ஒரே ஆன்மா மட்டுமே உள்ளது என்று கூறுவதை எப்படி ஏற்க முடியும்? பல உடல்களில் பல ஆன்மாக்கள் இருக்கின்றதே என்ற, ஏற்றி வைத்துக் கொண்ட அறிவின் காரணமாக சந்தேகங்கள் சிலருக்கு உண்டாவது இயல்புதான்.

இதுப்போன்ற சந்தேகங்களை தெளிவித்து, தெரிந்துக் கொள்ள வேண்டிய அரிய உண்மைகளை, தக்க உதாரணங்களுடன் உரைத்து, வெட்டவெளிச்சமாக வெளிக்கொண்டு வருகின்ற பாடங்கள்தான் இந்த **“பரம(தன்)னை அறியும் பாடம்”** என்ற இந்த வகுப்புகள் எனலாம்.

இந்த உலகியல் நடைமுறையில், எத்தனையோ ஜீவராசிகளும், விசயங்களும், பொருட்களும், என ஏகப்பட்டவைகள் இருக்கின்றன. இவ்வாறு இருப்பவைகளை மனிதன் தன்னிடம் இருக்கின்ற புலன்களின் அடிப்படையில் அறிந்துக் கொண்டு, அவைகளின் ஆக்கம் அப்படித்தான் இருக்கும் என்ற தீர்மானத்திற்கு வந்துவிட முடியாது.

உதாரணங்களாக, கானல் நீர், சிப்பியில் வெள்ளி, கயிற்றில் பாம்பு என எத்தனையோ விசயங்கள் நம் புலன்களின் அறிவுக்கும், அனுபவத்திற்கும் வித்தியாசம் இருப்பதைப் போல, ஏற்றி வைத்துக் கொண்ட சில அறிவுகளைக் கொண்டு, அதுதான் சரி என்ற தீர்மானமாகக் கூறிவிட முடியாது.

காரணம், நம்முடைய புலன்களுக்கும், மனதிற்கும் எட்டாத ஏகப்பட்ட விசயங்கள் இந்த வெளி உலகத்தில் இருக்கத்தான் செய்கின்றன. நமக்கு, நம் புலன்களால் அவைகளை அறிந்துக் கொள்ள முடியவில்லை என்பதினால், அவைகள் இல்லை என்று கூறிவிட முடியாது.

இல்லாத ஒன்றை இருக்கின்றது என்று மனிதனுக்கு கொடுக்கப்பட்ட இந்த பகுத்தறிவினால், அனுபவத்திற்கு கொண்டு வராமல் அவைகளை ஒப்புக் கொள்ளவும் முடியாது.

அப்படியானால், என்ன செய்யலாம்?

இதற்காகத்தான் மனிதனுக்கு என்று கொடுக்கப்பட்டுள்ள பிரத்யேகமான ஆறாவது அறிவான பகுத்தறிவைக் கொண்டு, அவைகளை சரியான முறையில், விபரம் அறிந்தவர்களின் வாயிலாக விசாரித்து அறியப்படுகின்ற பொழுது, நம் அறிவும், அனுபவமும் ஒன்றாகிவிடுகின்ற விடையைக் கண்டறியலாம்.

அப்படி நம் அறிவும், அனுபவமும் ஒன்றாக வேண்டும் என்றால், இந்த ஏற்றிவைத்துக் கொண்ட மனதில் என்ன மாதிரியான எண்ணங்களாக விசயங்கள் ஏற்றி வைக்கப்பட்டுள்ளன. அதன் உண்மைத்தன்மை என்ன? என்பதைப் பற்றிய மனதின் விசாரணையை மேற்கொள்ளாமல், விவேகத்தை அடைந்திட முடியாது.

பொதுவாக, விவேகி என்பவன் உண்மையை விசாரித்து அதன் விபரத்தை அறிந்துக் கொள்ளவே ஆசைப்படுவான்.

அந்த வகையிலே, இந்த உலகில், எனக்கு வேறாகப் பார்க்கப்படுகின்ற பலவற்றையும், பார்ப்பவனாகிய **“நான்”** இருப்பதினால்தான் *பார்வை, மற்றும் பார்க்கப்படும் பொருள்* என எல்லாமே இருக்கின்றன என்ற உண்மையை, இவன் இவனது மனதை விசாரிக்கும் பொழுது மட்டும்தான் அறிந்துக் கொள்கின்றான்.

பார்க்கப்படுகின்ற கண் என்ற புலன் இல்லாவிட்டால், எவ்வாறு பார்வையும், பார்க்கப்படும் பொருளும் கிடையாதோ, அதுப்போன்று, **“நான்”** என்ற ‘**அறிவு**’ இல்லாவிட்டால், இந்த உலகம், உயிர்கள், ஏன்? கடவுள் என எதுவுமே கிடையாது.

எனவே, எனக்கு வேறாக என் மனதில், நான் ஏற்றி வைத்துக் கொண்ட ஏகப்பட்ட விஷயங்கள் எல்லாமே, என்னுடைய கற்பிதமான எண்ணங்கள் எனும் பொழுது, என்னை **“நான்”** அறியாமல், மற்ற எதையும் ‘**நான்**’ அறிந்து ஒன்றும் ஆகப்போவதில்லை என்ற அரிய உண்மையை அவன் மனதை விசாரிக்கின்ற பொழுது அனுபவத்தில் அறிவை அடைகின்றான்.

ஆனால், நான் என்னை அறியாமல், மற்ற எல்லாவற்றையும் அறிய ஆர்வம் காட்டுவது என்பது, என்னுடைய அறியாமையைத்

தவிர வேறு என்னவாக இருக்க முடியும்? என்பதையும் ஏற்றுக் கொள்கின்றான்.

ஆக, அறியாமையில்தான் நான் அனைத்தையும் செய்துக் கொண்டிருக்கின்றேன் என்பதை அறிந்துக் கொள்வதற்கே ஒரு '**அறிவு**' வேண்டுமல்லவா?

அந்த அறிவிக்கும் அறிவாகத்தான் புறத்தில் **குருவும், சாஸ்திரமும்** தேவைப்படுகின்றன.

உண்மையில் இந்த குருவும், சாஸ்திரமும்கூட எனக்கு வேறாக, அன்னியமாக இல்லை, அவைகளும் என்னாலேயே என் மனதின் வாயிலாக, என்னுடைய அறிவில் ஏற்றி வைக்கப்பட்டவைகள்தான், இருப்பினும், இவைகள் என்னை எனக்கு சுட்டிக் காட்டும் என் சுய அறிவுடன் தொடர்பு கொண்டவைகள் என்பதினால், இவைகளின் வாயிலாக என்னை நான் முழுமையாக அறிந்துக் கொள்ள முடியும்.

அப்படிப்பட்ட அகத்தில் எனக்கு வேறாக என் **மனமும்**, என்னுடைய இருப்பாக **அறிவும்** இருப்பதை எனக்கு சுட்டிக் காட்டும் இவைகளை (குருவையும், சாஸ்திரத்தையும்) என் இருமைகள் என்ற அறியாமையில் இருந்து **ஒருமை** என்ற அறிவுக்கு வருவதைத்தான் இங்கு **"ஞானம்"** என்று அழைக்கப்படுகின்றது.

ஞானம் என்பதை இங்கு **"அறிவு"** என்றுதான் அறிந்துக் கொள்ள வேண்டும். அத்தகைய அக அறிவையும், ஏற்றி வைத்துக் கொண்ட புற அறிவு என்றுதான் அறிந்துக் கொள்ள வேண்டும்.

அந்த வகையிலே சாஸ்திரமும், குருவும் எனக்கு வேறாக வெளியில் இருந்து, எனக்கு கிடைத்த ஏற்றிவைக்கப்பட்ட *புற அறிவு* என்றே கூறலாம்.

ஆனால், இவைகளைப் புரிந்துக் கொள்கின்ற ***அக அறிவு*** இருக்கின்றதே, உண்மையில் அதுதான் **"நான்".**

ஆகவே, நான் இந்த உடல் அல்ல, உடலில் காணப்படுகின்ற புலன்கள் அல்ல, மனம் அல்ல, புத்தி அல்ல என்பதை என்று எனக்கு வேறாக வெளியில் கிடைத்த சாதனங்களான குருவையும், சாஸ்திரதையும் கொண்டு விசாரித்து அறிந்துக் கொள்கின்றேனோ, அன்று மட்டுமே எனக்கு என்னைப் பற்றிய உண்மை அறிவு வெளிப்படுகின்றது.

அது அறியாமையினால், மறைக்கப்பட்டிருந்ததை, குருவும், சாஸ்திரமும் மறைப்பை நீக்கி, வெளிச்சத்திற்கு கொண்டு வர காரணமாக இருந்தனர்.

அந்த அறிவை **"ஞானம்"** என்று எடுத்துக் கொண்டாலும், இவ்வாறு ஏற்றிவைத்துக் கொண்ட இந்த அறிவு, என்னை எனக்குச் சுட்டிக் காட்டியதினால், இதை '**மெய் அறிவு**' என்றும், '**மெய் ஞானம்**' என்றும் அறிந்துக் கொள்ளலாம்.

இந்த உலகத்தில் ஏற்றி வைத்துக் கொண்ட ஏகப்பட்ட அறிவின் அடிப்படையில், **இசைஞானி, விஞ்ஞானி**, என்று அவர்களை மக்கள் ஞானிகளாக ஏற்றுக் கொண்டாலும், உண்மையில் என்னை எனக்கு காட்டிக் கொடுத்த **"மெய்ஞானம்"** ஒன்று மட்டுமே, என்னை ஞானியாக வெளிப்படுத்திய உண்மை ஞானம் என்பதினால், இதை ஏற்றி வைத்துக் கொண்ட மற்ற அறிவு ஞானத்துடன் ஒப்பிட முடியாது.

ஏன் எனில், ஏற்றி வைத்துக் கொண்ட அறிவுகளின் வாயிலாக அடைந்த ஞானம், இந்த உடல் அழியும் பொழுது, அதுவும் சேர்ந்து உடலோடு அழிந்து விடும். ஆனால், என் இருப்பாகவே எப்பொழுதும்

இருக்கின்ற என்னைப் பற்றிய **“மெய்ஞானம்”** அதாவது, ‘**நான்**’ என்ற **“உண்மை அறிவு**” என்றுமே அழியாதது.

ஆம், ‘**நான்**’ என்ற எனக்கு அழிவே இல்லாத பொழுது, என் சுய அறிவாகிய என் **இருப்பு ஞானம்** என்னுடைய சொரூபமாகவே இருப்பதினால் அது எப்படி அழிவுக்கு உட்படமுடியும்?

இதை அறிவது மட்டும்தான் உண்மையில் இங்கு **“ஞானம்”** என்று அழைக்கப்படுகின்றது.

அந்த ஞானத்தினைத்தான் இங்கு **“மெய் ஞானம்”** என்று எடுத்துக் கூறி, அதைப்பற்றிய அனுபவத்திற்கு நம்மை அழைத்துச் செல்வதே, இந்த தன்னை அறியும் பாடங்களின் தலையாயப் பணி எனலாம்.

உண்மையில் ஒன்று மட்டும்தான் இருக்கின்றது.

அந்த ஒன்றாகவே **“நான்”** இருப்பதினால்தான், என்னால், எனக்கு வேறாக மற்ற எல்லாவற்றையும் அறிய முடிகின்றது.

எனக்கு வேறாக நான் அறிகின்ற எல்லாமே **“என்னுடைய அறிவின் பிரதி பிம்பமான மனதின் வாயிலாக வெளிப்படுகின்ற பிரதி பிம்பங்கள் மட்டும்தான்”** என்ற உண்மையை எடுத்துக் கூறத்தான் இந்த பாடங்கள் எல்லாமே.

ஆக, அனைத்தையும் அறிகின்ற **“அறிவு”** ஒன்று இருக்கின்றது அல்லவா?

உண்மையில், அதுமட்டும்தான் **“நான்”.**

எனவே, இந்த **"நான்"** இருப்பதினால்தான் மற்ற அனைத்தும் இருக்கின்றது. இந்த **"நான்"** என்ற எனக்கு வேறாக எதுவுமே கிடையாது, என்னால்தான் எல்லாம் இருக்கின்றது என்பது, என்னுடைய **"நான்"** என்ற இருப்பினால்தான் சாத்தியமாகின்றது.

அந்த வகையிலே, *'நான் இருப்பு', 'நான் அறிவு', 'நான் ஆனந்தம்'. 'நான் அனந்தம்', 'நான் அகண்டம்'* என பலவாறாக என்னை நானே என் மனதினால் ஏற்றிவைத்துக் கொண்ட அறிவாக இவ்வாறு அழைத்துக் கொள்ள முடிகின்றது.

ஆக, நானே எல்லாமாக இருக்கின்றேன் என்பதை என்னால் அறிந்துக் கொள்வதே இங்கு **"ஞானம்"** எனப்படுகின்றது.

இந்த அறிவை (ஞானத்தை), அதாவது, என்னைப் பற்றிய உண்மையை நான் அறிவது என்பது எனக்கு கொடுக்கப்பட்ட பகுத்தறிவைக் கொண்டு மட்டும் சாத்தியம் ஆகாது.

அந்த பகுத்தறியும் அறிவை எனக்கு புறத்தில் இருந்து, அகத்தில் சுட்டிக் காட்டும் குருவும், சாஸ்திரமும் இல்லாமல், இந்த மனிதப்பிறவியை அடைந்து ஒரு பயனும் கிடையாது.

**"அதுவாகவே நான் இருக்கின்றேன்"** என்பதை எனக்கு அறிவிக்கும் அறிவாகத்தான் இந்த குருவும், சாஸ்திரமும், குருகுல வகுப்புகள் வாயிலாக மனிதனுக்குத் தேவைப்படுகின்றது.

எப்பொழுது, என்னை நான் அறிந்துக் கொண்டேனோ, இனி, எனக்கு வேறாக எதுவுமே இல்லை என்கின்ற பொழுது, இந்த குருவும், சாஸ்திரமும் என்னிலிருந்து வேறாக இல்லை என்பதினாலே, எனக்கு அவைகளின் மீது விருப்பு, வெறுப்பு என்ற இருமைகள் இனி தோன்றாது.

ஆகவே, அவைகளும் **"நான்தான்"** என்பதை ஏற்றுக் கொண்டு, ஒன்றேயான ஏகாந்தத்தில் என்றும் நிலையான இன்பத்துடன் இந்த நீண்ட வாழ்க்கையை நிம்மதியாக இந்த புற உடலைக் கொண்டு, அக உலகை அனுபவித்து என்னால் வாழ்ந்திட முடியும். அத்தகைய ஞானியே **"ஜீவன் முக்தன்"** எனப்படுகின்றான்.

இத்தகைய மறைக்கப்பட்டுள்ள அறிவை, மற்ற எந்த உயிரினங்களும், மற்ற எந்த உடல்களின் வாயிலாகவும் அறிந்துக் கொள்ள முடியாது.

இது மனித உடல் எடுத்த, மகத்தான பகுத்தறிவு கொண்ட மனிதன் மட்டுமே தக்க சாதனங்களான குருவையும், சாஸ்திரத்தையும் கொண்டு அறிய முடியும் என்பதினால், கிடைத்தற்கரிய இந்த மனிதப்பிறவியை வீணாக இந்த உலகியல் விவகாரங்களில் ஈடுபடுத்திக் கொண்டு, இழிவான வாழ்க்கையை வாழ்ந்து அழித்துக் கொள்வது என்பது அறிவுடையவர்கள் செயல்கள் ஆகாது.

பொதுவாக, இருமைகளான *நன்மை - தீமை, பாவம், புண்ணியம், பிறப்பு - இறப்பு, தோற்றம் - மறைவு* என்ற எல்லாமே ஏற்றி வைத்துக் கொண்ட அறிவின் அடிப்படையில் வாழுகின்ற வாழ்க்கை என்பதினால், அரிதான மனிதப் பிறவி கிடைத்தும் **மனம், சித்தம், புத்தி அஹங்காரம்** என்ற அந்தக்கரணத்தின் துணைக் கொண்டு, புலன்களான **கண்கள், காதுகள், மூக்கு, நாக்கு, தோல்** என்ற புறக்கரணக்களினால் அடையும் இன்பங்களைச் சார்ந்த வாழ்க்கையாகவே முடிந்துவிடக் கூடாது. அவைகளைக் கடந்த என்றும் அழியாத ஆன்மாவே **"நான்"** என்ற உண்மையை உணர்ந்துக் கொள்வதற்காகவே இந்த பாடங்களை கற்க வேண்டும்.

**இருப்பே அறிவு! அறிவே நான்!**

பராவித்யா வழங்கும்

# தன்னை அறியும் தமிழ் வழி வேதாந்த பாடங்கள்

## முகவுரை



சுவாமி பிரபஞ்சநாதன்